Regd : No. TN - MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 50 காசு
POST WITHOUT PRE - PAYMENT LICENCE NO G 6 - TN - MS (C) P. P. 55



**வேகம்**

மாணவர் களிடையே வேகம் தேவைதான். என்றாலும் அந்த வேகம் வகைப்படுத்தப் படவேண்டும்; முறைப் படுத்தப்பட வேண்டும்.

-பேரறிஞர் அண்ணா



# அண்ணா

**நிறுவனர்: எம்.ஜி.ஆர்**

**அறிவாளி**

அறிவாளிக்கு- இயற்கையை உணர்ந் தவனுக்கு துன்பமே வராது.

-தந்தை பெரியார்



மலர் : 9 சென்னை 31-12-1984 திங்கள் ★ ★ ★ வெளியூர் 1-1-1985 செவ்வாய் இதழ் 75



# தமிழகத்தில் புதிய வரலாறு

## மூன்றாவது முறையாக

# முதல்வராக புரட்சித்தலைவர்

# எம்.ஜி.ஆர்.தேர்வு

சென்னை, டிச. 31- இன்பத் தமிழகத்தின் இணையில்லாப் பெருந்தலைவன்- எங்கள் இதய மூச்சென்று எல்லோரும் போற்றுகின்ற இணையற்ற பெருவள்ளல் - ஏழைகளின் ஏந்தல்-பிள்ளைப் பசி போக்கிய பேராளன் - தவசீலர் - புண்ணிய புருஷர் புரட்சித் தலைவர் அனைத்திந்திய அண்ணா தி. மு. கழக சட்ட மன்றக் கட்சித் தலைவராக இன்று ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார் என்ற திக்கெட்டும் தேன்மழை பொழியும் செய்தியினை மிகமிக மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

1967ல் இரத்தம் சிந்தி மறுபிறவி எடுத்து மைதானத்தில் இருந்த நம்மை கோட்டை மண்டபத்தில் கொலுவீற்றிருக்கச் செய்த கோமான் - புன்னகை மன்னன் - பூவிழிக் கண்ணன் - எங்கள் அண்ணன்- இதய மன்னனாம் புரட்சித்தலைவர் மூன்றாம் பிறவி எடுத்த 1984-ல் மூன்றாம் முறையாகத் தமிழக முதலமைச்சராகப் பதவி ஏற்று பொன்னாட்சி அமையப்போகிறது. புத்தாண்டு புதிய பூபாளம்பாடிப் பிறக்கிறது. எங்கும் பரவசம். இது எப்போதும் தொடரட்டும் என்று நல்லோர் இதயங்கள் களிநடனம் புரிகின்றன.

புரட்சித் தலைவரின் வாழ்க்கையில் சம்பவங்கள் என்று ஏதுமில்லை. எல்லாமே சரித்திரங்கள் சாதனைகள் என்பதை உலகறியும்.

அத்தனையிலும் அற்புதம்படைக்கும் வித்தகத் தலைவராம் புரட்சித் தலைவரின் பத்திரமான கரங்களில் பாதுகாப்பாக தமிழகத்தை நடந்து முடிந்த தேர்தலில்தமிழக மக்கள் ஒப்புடைத்தனர்.

தமிழக வரலாறு இது வரை காணா அற்புதமான வெற்றியைப் பரட்சித்தலைவரின் அணி இந்தத் தேர்தலில் படைத்தது.



அமெரிக்காவில் முதல்வர் புரட்சித்தலைவருக்கு சிறுநீரக மாற்று ஆபரேஷன் நடந்த 3-வது நாள் எடுத்தபடம் இது. புரட்சித்தலைவருக்கு பிரதமர் ராஜீவ்காந்தியின் வாழ்த்துக்களை அமெரிக்காவிலுள்ள இந்தியத் தூதர் பாஜ்பாய் தெரிவித்தார். படத்தில் பாஜ்பாய், புரட்சித் தலைவர், ஜானகிஅம்மையார், டாக்டர் ப்ரீட்மன் ஆகியோர் உள்ளனர்.

## மக்கள் கட்டளை

சொன்னதைச் செய்வதும், செய்வதைச் சொல்வதும் சொல்லாமலே பல நன்மைகளைச் செய்வதை வாடிக்கையாகவும், வாழ்க்கையாகவும் கொண்ட புரட்சித் தலைவரின்அணி தேர்தல் களத்தில், "அடுத்த முதல்வர் புரட்சித் தலைவர் எம். ஜி. ஆர்," என்று சொல்லியே ஓட்டுக் கேட்டது. அடுத்த முதல்வராகப் புரட்சித்தலைவர் எம். ஜி. ஆரைத் தேர்ந்தெடுப்போம் - அவரே எங்களுக்குத் தலைவர்- அவரே என்றைக்கும் முதல்வர் என்ற வகையில் ஆட்சிப் பொறுப்பை அனைத்திந்திய அண்ணா தி. மு கழகத்திடம் மக்கள் ஒப்படைத்தார்கள்.

"மக்கள்குரலேமகேசன் குரல்" என்ற உணர்வோடு மக்கள் கட்டளையை அணுப்பிசகாமல் நிறைவேற்றும் புரட்சித் தலைவரின் போர்ப் படையாம் கழகச் சட்டமன்றக்கட்சி-இன்று 31- 12- 1984- (திங்கட் கிழமை)காலை11மணிக்கு சென்னை அடையாறு சத்யாஸ்டுடியோவில் கூடி

2-ம் பக்கம் பார்க்க

இந்தியாவில் இரு இமயம்
ஒன்று வடக்கே !
இங்கே ஒன்று - இதோ
எம் தலைவர் !
மலைமீதுள்ள பட்டணம் போல்
அவர் ஆட்சி பிரகாசிக்க
அர்ப்பணிப்போம் எமை என்றும் !

# ராஜீவ் மீண்டும் பிரதமர்



புதுடெல்லி, டிச. 31- புதிதாக வெற்றிபெற்ற இ.காங்கிரஸ்எம்.பி.க்கள் இன்று டெல்லியில்கூடினர்.

என்.டி. திவாரி (உ.பி.) அர்ஜுன்சிங் (மத்திய பிரதேசம் வசந்த்தாதாபட்டீல் (மராட்டியம்) மாதவசிங் சோலங்கி (குஜராத்) கருணாகரன் (கேரளா) ஆகிய முதல்வர்கள் கூட்டத்தில் கலந்து கொண்டனர்.

நாடாளுமன்ற கட்டிட வாசலில் ஏராளமான காங்கிரஸ் ஊழியர்கள் கூடி இருந்தனர்.

அமிதாப்பச்சன், சிவாஜிகணேசன், வைஜயந்திமாலா ஆகியோர் வந்தபோது காங்கிரஸ் தொண்டர்கள் கைதட்டி வரவேற்றனர்.

புதிதாக தேர்ந்தெடுக்கபட்ட தென் மாநில எம்.பி.க்கள் டெல்லிக் குளிரில் நடுங்கிப் போனார்கள். குளிர் தாங்க முடியவில்லை என்று கூறினார்கள்.

பின்னர் நடந்த கூட்டத்தில் பிரதமராக ராஜீவ் காந்தி மீண்டும் தேர்ந்தெடுக்கப்பட்டார்,

2-ம் பக்கம் பார்க்க



Edited and Published by K. RAVINDRAN on behalf of Thangamani Publications and Printed by All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, Madars—600 029,

# எம்.ஜி.ஆர். தேர்வு...

1-ம் பக்க தொடர்ச்சி

மக்கள் சக்தியின் மாபெரும் வடிவமான நம்மருந்தலைவராம் புரட்சித்தலைவர் எம்.ஜி, ஆரை தனது தலைவராக ஏகமனதாகத் தேர்ந்தெடுத்தது.

## மகிழ்ச்சி வெள்ளம்

முதல்வராக புரட்சித் தலைவர் தேர்ந்தெடுக்கப்பட்ட தீர்மானம் நிறைவேற்றப் பட்டதும் எழுந்த ஆரவாரம், கை தட்டல்கள், மகிழ்ச்சிப் பெருக்கு இவற்றை விவரிக்க மற்றொரு கம்பன் பிறப்பெடுத்து வந்தால் தான் முடியும். எங்கும்மகிழ்ச்சிப் பெரு வெள்ளம்.

## நாவலர் தலைமையில் கூட்டம்

அனைத்திந்திய அண்ணா தி. மு. கழக சட்டமன்றக் கட்சியின் முதற் கூட்டம் இன்று (திங்கட்கிழமை) சென்னை சத்யா ஸ்டுடியோவில் நிதியமைச்சர் டாக்டர் நாவலர் தலைமையில் கூடியது.

தமிழக சட்டமன்றத்திற்குப் புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட கழகஉறுப்பினர்கள், சட்டமேலவை உறுப்பினர்கள், மக்களவை, மாநிலங்களவை உறுப்பினர்கள் கலந்து கொண்ட இக்கூட்டம் காலை 11 மணிக்குக்கூடி 1.15 மணிவரைநடந்தது

கூட்டத்தில் ஐந்து தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

கழகத்தைப் பெரு வெற்றிபெறச் செய்த தமிழ்ப் பெருமக்களுக்கு நன்றி கூறுகிறது முதல் தீர்மானம்.

வெற்றிக்கனியைச் சிந்தாமல்சிதறாமல்பெற்றுத் தந்த கழகத்தோழர்கள் கூட்டணிக் கூட்சித் தலைவர்கள் தொண்டர்களைப் பாராட்டி நன்றி கூறுகிறது இரண்டாவது தீர்மானம்.

ஏழாண்டு கால ஆட்சியில் அற்புதம் பல செய்து அரும் பெரும் திட்டங்கள் தீட்டி எல்லா வெற்றிக்கும் காரணகர்த்தாவாகத் திகழும் இதய தெய்வம் புரட்சித் தலைவர் புகழ்பாடிவணங்கி வாழ்த்துகிறது மூன்றாவது தீர்மானம்.

எண்ணற்ற உதவிகள் செய்து, ஒப்பற்றகூட்டணி உருவாக கருவாக இருந்த அன்னை இந்திராவுக்கும், பிரதமர் ராஜீவிற்கும், நன்றி கூறுகிறது நான்காம் தீர்மானம்.

தமிழகத்தின்எதிர்காலத்தில் எல்லாருக்கும் நம்பிக்கையூட்டும் ஒளி விளக்கு ஐந்தாவது தீர்மானம்- ஆம்... புரட்சித் தலைவர்எனும்புனிதர்க்கு புகழமிக்க தமிழகமெனும் புண்ணிய பூமியை ஆளும் பொறுப்பினை அளித்திட்ட இந்த ஐந்தாவது தீர்மானம் வரலாற்றில் வைரவரிகளில் இடம் பெறுகிறது.

## ஆளுநர்

அனைத்திந்திய அண்ணா தி. மு. கழக சட்டமன்றக் கட்சித் தலைவராக புரட்சித் தலைவரைத் தேர்ந்தெடுத்த தீர்மானத்தை தமிழக ஆளுநர் குரானாவிடம் ஒப்படைக்க கழகத் தலைவர்கள் ஆளுநர் மாளிகைக்கு விரைந்து சென்றனர்.

டாக்டர் நாவலர், பொதுச் செயலாளர் ப. உ. ச., அமைச்சர்கள் பண்ருட்டிராமச்சந்திரன், கே.ஏ.கே., ஆர்.எம்.வீ., அரங்கநாயகம், காளிமுத்து மற்றும் கழகப் பொருளாளர் செ. மாதவன் ஆகியோர் ஆளுநரிடம் தீர்மானத்தைக் கொடுத்தனர்.



# தமிழக சட்ட சபையில் இறுதி நிலவரம்

| | |
|---|---|
| மொத்த இடங்கள் | 234 |
| தேர்தல் நடைபெற்றவை | 232 |
| தேர்தல் நிறுத்திவைக்கப்பட்டவை | 2 |

| கட்சிகள் | போட்டியிட்ட இடங்கள் | வெற்றி பெற்ற இடங்கள் | கலைக்கப்பட்ட சட்டசபையில் இருந்தநிலைமை |
|---|---|---|---|
| **கழகக் கூட்டணி :** | | | |
| கழகம் | 154 | 133 | 131 |
| இந்திரா காங்கிரஸ் | 72 | 62 | 33 |
| கா. கா. தே. கா. | 4 | 2 | 3 |
| அ. இ. பா. பிளாக் | 3 | 1 | 3 |
| குடியரசுக் கட்சி | 1 | 1 | 1 |
| **தி. மு. க. கூட்டணி :** | | | |
| தி. மு. க. | 158 | 20 | 32 |
| மார்க்சிஸ்டு | 17 | 5 | 11 |
| ஜனதா | 17 | 3 | 2 |
| இந்தியக் கம்யூனிஸ்டு | 16 | 2 | 8 |
| இ. யூ. மு. லீக் | 6 | 2 | 1 |
| த. நா. பா. பிளாக் | 3 | 0 | 1 |
| கா. கா. (நெடுமாறன்) | 7 | — | 1 |
| உழவர்உழைப்பாளர் (நாயுடுகட்சி) | 10 | — | — |
| எஸ். டி. எஸ். கட்சி | 100 | — | 4 |
| இந்து முன்னணி | விவரம் தெரியவில்லை | 1 | — |

# ராஜீவ் மீண்டும் பிரதமரானார்...

(முதற்பக்கத் தொடர்ச்சி)

பிற்பகலில் பதவி ஏற்பு நிகழ்ச்சிநடக்கிறது.

## நாடாளுமன்றம் கலைப்பு

நாடாளுமன்றத்தின் ஆயுட் காலம்ஜனவரி20ந் தேதிவரை உள்ளது.

அமைச்சரவையின் பரிந்துரையின் பேரில் 20 நாட்களுக்கு முன்னதாக நாடாளுமன்றத்தை ஜனாதிபதி ஜைல் சிங் கலைத்து, உத்திரவிட்டார்.

புதிய நாடாளு மன்றம் பிப்ரவரி மாத மத்தியில் கூடும்.

## யார் - யார்?

மத்திய அமைச்சரவைப் பட்டியலை பிரதமர் ராஜீவ் காந்தி இன்று மாலை அறிவிப்பார்.

எம்.பி.க்கள்கூட்டத்தில் மீண்டும் பிரதமராகத் தேர்வு பெற்ற ராஜீவ் காந்தி பேசுகையில், "தூய்மையான, திறமையான, நேர்மையான நிர்வாகத்தை நடத்துவேன்" என்று குறிப்பிட்டார்.

தேர்தல் வெற்றியானது காங்கிரசின் கொள்கைகளுக்கும், லட்சியங்களுக்கும் கிடைத்த வெற்றி தற்போதைய நிர்வாக முறையில் நல்லமாற்றங்களைக் கொண்டு வரவேண்டியுள்ளது. நவீன விஞ்ஞானத் துறைக்கு முதலிடம் கொடுக்கவேண்டும்என்றும் பிரதமர் குறிப்பிட்டார்.

பிரதமர் பதவிக்கு ராஜீவ் பெயரை நரசிம்மராவ் முன்மொழிந்தார். மோசினாகித்வாய். வி.பி. சிங் ஆகியோர்வழி மொழிந்தனர்.

பிரதமராக ராஜீவ் காந்தி ஒருமனதாகத் தேர்ந்தெடுக்கப் பட்டார் என்று கூட்ட நிகழ்ச்சியை நடத்திய பூட்டாசிங்அறிவித்தார்.

## தஞ்சையில் பலத்த மழை

தஞ்சை, டிச. 31- தஞ்சை மாவட்டத்தில் நேற்றிரவு பலத்த மழை பெய்தது.

சம்பா தாளடி பயிருக்கு இது மிகவும் பானுள்ளது என்று விவசாயிகள் கருதுகிறார்கள்.

மேட்டூர் அணையில் 63.9 அடி தண்ணீர் உள்ளது.

## கவியரசு கண்ணதாசன் நினைவு மன்ற விழா

கோவை டிச. 31- கவியரசு கண்ணதாசன் நினைவு மன்ற வளர்ச்சி நிதிக்காக திரைப்பட வசன கர்த்தா சக்கரவர்த்தி சீனிவாசன் எழுதி, இயக்கி: லூஸ்மோகன் நடிக்கும் 'மை டியர் மாமா' என்னும் நகைச்சுவை நாடகம் நாளை (1ந்தேதி) மாலை 6 மணி அளவில் கோவை மாநகராட்சி கலையரங்கில் நடைபெறுகிறது.

இந்த நிகழ்ச்சிக்கு சம்பூர்ணம் அறக்கட்டளை ஸ்தாபகர் ஜி. வெங்கட்ரமணன் தலைமை வகிக்க கே. தாமோதரசாமி நாயுடு முன்னிலை வகிக்கிறார்.

சிறப்பு விருந்தினராக கோவை வானொலி நிலையஇணை இயக்குனர் விஜயதிருவேங்கடம் பங்கேற்கும் இந்நிகழ்ச்சிக்கு ஆ. இராசன் வரவேற்புரையாற்ற, மனோகரன் நன்றி கூறுகிறார்.

நிகழ்ச்சியில் வலம்புரி ஜான் எம். பி, சுகி சிவம், புலவர் ராமதாசு, மு. வேலாயுதம், புலவர் வெங்கடேசன் உள்ளிட்ட பலரும் பங்கேற்கின்றனர்.



## அடுத்த தேர்தலை சந்திக்க இந்த தேர்தலில் வெளியிட்ட தேர்தல் அறிக்கையை எடுத்துச் செல்வோம்

இந்தத் தேர்தலில் நாம் கொடுத்த வாக்குறுதிகளை நிறைவேற்றியே தீர வேண்டும்.

அடுத்த தேர்தலில் மக்களைச் சந்திக்கும் போது 1984-ல் வெளியிட்ட தேர்தல் அறிக்கையைக் கையோடு எடுத்துச்செல்வோம்.

இதில் சொன்ன வாக்குறுதிகளை நாங்கள் நிறைவேற்றி விட்டோம் என்று மக்களிடம் சொல்லி ஓட்டுக் கேட்போம்.

- புதிய எம். பி.க்கள் கூட்டத்தில் பிரதமர் ராஜீவ்

தமிழ்நாடு பரிசு சீட்டு

# தஞ்சை, திருப்பூருக்கு தலா ரூ.1 லட்சம் பரிசு

சென்னை, டிச. 31- தமிழ்நாடு அரசு பரிசு சீட்டு திட்டத்தின் 165-வது குலுக்கல் சென்னையில் நடைபெற்றது. தஞ்சாவூருக்கும் திருப்பூருக்கும் முதல் பரிசாக தலா ரூ. 1 லட்சம் கிடைத்துள்ளது.

தமிழ்நாடு பரிசுச்சீட்டு குலுக்கல் முடிவுகளின் விவரம் வருமாறு:-

**ஆர்.எ வரிசை;**

முதல் பரிசு (ரூ 1 லட்சம்.)
030769 (தஞ்சாவூர்.)

2-வது பரிசு (ரூ 10 ஆயிரம்)
282003. (பெரியகுளம்)

3-வது பரிசு (ரூ. ஆயிரம்)
578925 211502
419925 559799

**ஆர். பி. வரிசை**

முதல் பரிசு (ரூ. 1 லட்சம்)
541100 (திருப்பூர்)

இரண்டாவது பரிசு (ரூ10 ஆயிரம்)
515002 (வேலூர்)

மூன்றாவது பரிசு (ரூ. ஆயிரம்)
086503 117945
541758 375395

**ஆர்.சி. வரிசை**

முதல்பரிசு (ரூ.1 லட்சம்)
201361 (வெளி மாநிலம்)

2 வது- பரிசு (ரூ. 10 ஆயிரம்)
311102 (கோவை)

3 வது- பரிசு (ரூ. ஆயிரம்)
144590 094124
237398 590650

கீழ்க்கண்ட எண்களில் முடிவடையும் சீட்டுகளுக்கு பரிசு உண்டு.

நாலாவது பரிசு (ரூ. 500-)
15785 63644 86918
17279 40562 72333
29215 37460
48177, 71744,

ஐந்தாவது பரிசு (ரூ.50-)
1416, 9162, 1215, 1940
4775, 8937, 1723, 0967
7310 1564

ஆறாவது பரிசு (ரூ. 20-)
2328 1241 9473 2104 1497

ஏழாவது பரிசு (ரூ. 10-)
487 935 198 169 231
417 272 298 642 378

எட்டாவது பரிசு (ரூ. 5-)
244 915 060 854 868 221
713 963 686 602 077 779
240 202 062 363
026 491 794 621

இன்று

## மின்சார ரயில் சர்வீஸ் பாதிப்பு

சென்னை, டிச. 31- மின் கோளாறு காரணமாக எழும்பூருக்கும் பீச் ஸ்டேசனுக்கும் இடையே, இன்று காலை 2 மணி நேரம் மின்சார ரயில் சர்வீஸ் பாதிக்கப் பட்டது. எனினும் பயணிகள் சங்கடத்தை தவிர்க்க பல்லவன்நிர்வாகம்விசேஷ பேருந்துகளை ஏற்பாடு செய்திருந்தது.

## மீண்டும் முதல்வராக புரட்சித்தலைவர் தேர்ந்தெடுக்கப்பட்ட பின்

# அடுத்த நடவடிக்கை என்ன?

## டாக்டர் நாவலர் அறிக்கை



**சென்னை, டிச. 31- மீண்டும் முதல்வராக புரட்சித்தலைவர் தேர்ந்தெடுக்கப்பட்டபின், அடுத்து என்ன நடவடிக்கை என்பது குறித்து நிதியமைச்சர் டாக்டர் நாவலர் அறிவித்தார்.**

நிதிஅமைச்சர் டாக்டர் நாவலர் விடுத்துள்ள அறிக்கை வருமாறு:-

29-12-84 ந்தேதி மாலை தலைமை கழகச் அலுவலகத்தில் கழகத்தின் ஆட்சி மன்றக் குழு உறுப்பினர்கள் கூட்டம் நடந்தது.

இந்தக் கூட்டத்தில் நான் நிதியமைச்சர் டாக்டர் நாவலர், பொதுச் செயலாளர் ப. உ. ச. பொருளாளர் மாதவன், அமைச்சர்கள் பண்ருட்டி ராமச்சந்திரன், கே.ஏ.கே. ஆர். எம். வீ: காளிமுத்து ஆகியோர் கலந்துகொண்டோம்.

மாபெரும் வெற்றியைத் தேடித்தந்த வாக்காளப் பெருமக்களுக்கு நன்றியைத் தெரிவிக்கவும், கழகச் சட்ட மன்ற தலைவராக புரட்சித் தலைவரை தேர்ந்து எடுக்கவும், புதிதாக தேர்ந்து எடுக்கப்பட்ட சட்டமன்ற பேரவை உறுப்பினர்கள் கூட்டத்தை 31-ந்தேதி (இன்று) காலை 10-30 மணியளவில் சத்தியா ஸ்டுடியோ அரங்கத்தில் கூட்டுவது என்றும், சட்டமன்ற மேலவை உறுப்பினர்கள், நாடாளுமன்ற மாநிலங்களவை உறுப்பினர்கள், புதிதாக தேர்ந்தெடுக்கப்பட்ட நாடாளுமன்ற மக்களவை உறுப்பினர்கள் ஆகியோருக்கு சிறப்பு அழைப்பு அனுப்புவது என்றும் முடிவு செய்யப்பட்டது.

கழக சட்டமன்ற கட்சி கூட்டத்தின் தீர்மானத்தை 31ந்தேதி அன்று மாலை தமிழக ஆளுநரிடம் கொடுப்பது என்றும், அரசியல் சட்டப்படி மேற்கொண்டு என்னென்ன முறைகளை சட்ட ரீதியாக கடைபிடிக்க வேண்டும் என்று தமிழக ஆளுநர் கூறுகின்றாரோ அந்த நடவடிக்கைகளை முறைப்படி மேற்கொள்வது என்றும் முடிவு செய்யப்பட்டது.

இவற்றைத் தவிர வேறு எந்தவிதமான நடவடிக்கைகளையும் மேற்கொள்ள கழகம் திட்டமிடவில்லை.

செய்தித்தாள்களில் வெவ்வேறு விதமாக வெளியிடப்படும் செய்திகளுக்கு ஆதாரம் எதுவும் இல்லை என்பதை தெரிவித்துக்கொள்கிறேன்.

இவ்வாறு நிதியமைச்சர் டாக்டர் நாவலர் தன் அறிக்கையில் கூறியுள்ளார்.

## கர்நாடக சட்டசபை கலைப்பு

பெங்களூர் டிச. 31- கர்நாடகசட்டசபையைக் கலைத்து விட்டு தேர்தல் நடத்தலாம்என்று ஜனாதிபதிக்கு கவர்னர் பானர்ஜி சிபாரிசு செய்துள்ளார்.

நாடாளுமன்றத் தேர்தலில் கர்நாடக மாநிலத்தில் ஜனதா கட்சி தோல்வி அடைந்தது. அதைத் தொடர்ந்து அந்த மாநிலத்தில் ஹெக்டே தலைமையிலுள்ள ஜனதா மந்திரி சபை ராஜினாமா செய்தது.

ராஜினாமா கடிதத்தில் கர்நாடகசட்டசபையைக் கலைத்துவிட்டு புதிதாக தேர்தல் நடத்தவேண்டும் என்றுஹெக்டே கூறியிருந்தார்.

ஹெக்டே மந்திரிசபையைக் கலைத்துவிட்டு கொல்லைப்புற வழியில் இந்திரா காங்கிரஸ் ஆட்சியை புகுத்த ராஜீவ் காந்தி விரும்பவில்லை.

எனவே சட்டசபை கலைக்கப்பட்டு புதிதாக தேர்தல் நடத்தப்படும் என்று நம்பகமாகத் தெரிகிறது.

சட்டசபையைகலைக்கும்படி ஜனாதிபதிக்கு கவர்னர் சிபாரிசு செய்துள்ளார்.





### மத்தியில் நிலையான ஆட்சிக்கும்- தமிழகத்தில் நல்லாட்சி தொடரவும் வாக்களித்த

## தமிழகவாக்காளர்கட்கு சிவாஜிகணேசன் நன்றி அறிவிப்பு

**சென்னை, டிச. 31- மத்தியில் நிலையான ஆட்சி அமையவும், தமிழகத்தில் நல்லாட்சி தொடரவும் வாக்களித்த வாக்காளர்களுக்கு சிவாஜி கணேசன் எம்.பி நன்றி தெரிவித்துக்கொண்டுள்ளார்.**

தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி பிரச்சாரக் குழுத் தலைவர்சிவாஜிகணேசன் எம். பி. வெளியிட்டுள்ள அறிக்கையொன்றில் தெரிவித்திருப்பதாவது;--

வரலாறு காணாதவகையில் இந்திய மக்கள் காங்கிரஸ் கட்சிக்கு வாக்களித்துள்ளனர். அன்னை இந்திராவின்ஒன்றுபட்டபாரதத்தைக் கட்டிக் காக்கும் பேராற்றல் இளைஞர்களின்எழுச்சிமிகுதலைவர் பாரதப் பிரதமர் - என் அன்புச்சகோதரர் ராஜீவ் காந்திஅவர்களுக்குஉண்டு என்பதை மக்கள் தெளிவாக நடந்து முடிந்திருக்கும் நாடாளுமன்ற தேர்தலில் மெய்ப்பித்துவிட்டனர்.

மத்தியில் ஒரு நிலையான வளமான ஆட்சிக்கு வழி வகுத்ததோடு, தமிழகத்திலும் ஒரு நிலையான நல்லாட்சி அமைய காங்கிரஸ் - அனைத்திந்திய அண்ணா தி.மு. கழக கூட்டணிக்கு வாக்களித்த தமிழக மக்களுக்கு என் இதய பூர்வமான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். தமிழகம் ஒருபோதும் தேசிய நீரோட்டத்திலிருந்து விலகி நிற்க முடியாது என்பதை இத்தேர்தல் மூலம் மக்கள் தெளிவாக நிரூபித்துள்ளனர்.

எனது நெடிய தேர்தல் சுற்றுப்பயணத்தின்போது எனக்கு உற்சாகமாக வரவேற்பளித்த மக்களுக்கும் காங்கிரஸ் - அனைத்திந்திய அண்ணா தி. மு. கழக கூட்டணி வேட்பாளர்களின் வெற்றிக்காக அயராது பாடுபட்ட காங்கிரஸ் தோழர்கள், என் அண்ணன் எம். ஜி. ஆரின் இரத்தத்தின் ரத்தமான உடன்பிறப்புக்கள் - மன்றத்து இதயங்கள் மற்றும் குடியரசுக் கட்சி - காந்தி காமராஜ் தேசிய காங்கிரஸ் - பார்வர்டு பிளாக் ஆகிய கட்சிகளின் செயல் வீரர்கள்-தொழிற் சங்க அமைப்புகள்- இளைஞர், மாதர், மாணவர் காங்கிரஸ் - அரிஜன மற்றும் சிறுபான்மையினர் பிரிவு ஆகிய அமைப்புகளைச் சார்ந்த தோழர்களுக்கும், என் இதயபூர்வமான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாறு சிவாஜி கணேசன் எம்.பி. தெரிவித்துள்ளார்.

### காங்கிரஸ் தலைவர் பொறுப்பை

## திறமையானவர் கிடைத்தால் ஒப்படைப்பேன் ராஜீவ் விருப்பம்

புதுடெல்லி, டிச. 31- இந்திரா காங்கிரஸ் கட்சியைத் திறமையாக நடத்திச் செல்லும் தகுதியுடைய தலைவர் கிடைத்தால் அவரிடம் தலைவர் பதவியை நான் ஒப்படைப்பேன் என்று பிரதமர் ராஜீவ் நேற்று நிருபர்களிடம் பேசுகையில் கூறினார். பிரதமராக இருக்கும் ராஜீவ் சமீபத்தில் தான் இந்திரா காங்கிரஸ் தலைவர் பொறுப்பையும் ஏற்றார்.

## அமைச்சர்கள் அருணாசலம் வீராசாமிக்கு வரவேற்பு

சென்னை, டிச. 31- ஒரத்தநாடு தொகுதியில் வெற்றிபெற்ற அமைச்சர் வீராசாமியும், நாமக்கல் தொகுதியில் வெற்றி பெற்ற அருணாசலமும் நேற்று காலை சென்னைக்கு வந்தனர்.

அவர்களை ஏராளமான கழகத் தோழர்களும், மன்றத் தோழர்களும் மாலை அணிவித்துவரவேற்றனர்.

பட்அதிபர் தமிழ்மணி, தொழிலதிபர்கள் அலிபாய், சுப்பாராவ் மற்றும் ஏராளமானோர் மாலை அணிவித்துவரவேற்றனர்.



## முதலமைச்சர் தேவை: கர்நாடக கவர்னர் அழைக்கிறார்

பெங்களூர், டிச. 31- கர்நாடகாவில் ராமகிருஷ்ண ஹெக்டே ராஜினாமா செய்துள்ளது தெரிந்ததே.

இது குறித்து கவர்னர் பானர்ஜியை நிருபர்கள் சந்தித்து அடுத்த நடவடிக்கை என்ன என கேட்டனர்.

கவர்னர் பானர்ஜி நிருபர்களிடம்கூறியதாவது:-

விரைவில் இதுபற்றிநீங்கள் தெரிந்து கொள்ளலாம். மாற்று ஏற்பாடுகள் செய்யப்படும் வரை ராமகிருஷ்ண ஹெக்டேயின் மாற்று மந்திரிசபை நீடிக்கும்.

இதுவரை வேறு யாரும் மந்திரி சபை அமைக்க தங்களுக்கு ஆதரவு இருப்பதாக என்னைச்சந்தித்து தெரிவிக்கவில்லை.

அப்படி யாராவது என்னை வந்து சந்திக்க விரும்பினால் அவர்களை வரவேற்கத் தயாராக உள்ளேன். இவ்வாறு கவர்னர் பானர்ஜி கூறினார்.

செல்வி

## முத்துமாலை நினைவு நாள்



கடமையில் நான் எங்கோ இருந்த
இதே நாளில் நீ கண்மூடி விட்டாய் !
தியாகம் செய்வதில், அயராது உழைப்பதில்,
பகைக்கு அஞ்சாத துணிச்சல்,
தலைவன் மீதும் கொள்கை மீதும்
நான் கொண்டுள்ள ஆழ்ந்த நம்பிக்கையில்
எனது பயணத்தில்
நீ என்றும் இருப்பாய் !

பி. முசிறிப்புத்தன்

சென்னை
1-1-85


டாக்டர் நாவலர்
ஆத்தூர்


பண்ருட்டி
ராமச்சந்திரன்
பண்ருட்டி


கே. ஏ. கே.
ஆயிரம்விளக்கு


அரங்கநாயகம்
தொண்டாமுத்தூர்


காளிமுத்து
மதுரை கிழக்கு


பொன்னையன்
திருச்செங்கோடு


குழந்தைவேலு
கோபி நாடாளுமன்றம்


முத்துசாமி
ஈரோடு

# வாகைசூடிய வள்ளலின் வழிநடக்கும்

# ★ வெற்றி வீரர்கள் ★


திருநாவுக்கரசு
அறந்தாங்கி


எஸ். என்.
ராஜேந்திரன்
தூத்துக்குடி


சவுந்தரராசன்
திருவரங்கம்


எம். ஆர்.
கோவேந்தன்
பேராவூரணி


ஆர் அருணாசலம்
நாமக்கல்

## ஆண்டிப்பட்டி-புரட்சித்தலைவர்

மொத்த வாக்குகள் 1,33,117
பதிவானவை 93,155
செல்லாதவை 3,374
முதல்வர் புரட்சித் தலைவர் (கழகம்) 60,510
வல்லரசு (பார்வர்டு பிளாக்) 28,026
சுயேச்சைகள் 5 பேர் டெபாசிட் இழந்தனர்.

## ஆத்தூர் - நாவலர்

மொத்தவாக்குகள் 1,52,733
பதிவானவை 1,10,714
செல்லாதவை 4,348
டாக்டர் நாவலர் (கழகம்) 67, 178
ராஜாம்பாள் (தி. மு. க.) 37,605
சுயேச்சைகள் 5 பேர் டெபாசிட் இழந்தனர்.

## மேல் மலையனூர்-ப.உ.ச

மொத்த வாக்குகள்: 1,26,800
பதிவானவை: 96,133
செல்லாதவை: 5,504
ப.உ.ச. (கழகம்)-61,289
ரங்கநாதன் (தி'மு.க)- 27,343
சுயேச்சைகள் 4 பேர் டெபாசிட் இழந்தனர்.

## திருப்பத்தூர்-மாதவன்

மொத்த வாக்குகள்: 1,24,243
பதிவானவை: 90,317
செல்லாதவை: 4,337
மாதவன் (கழகம்) 51,581
அழகு (தி. மு. க.) 29, 673
சுயேச்சைகள் 3 பேர் டெபாசிட் இழந்தனர்.

## பண்ருட்டி-ராமச்சந்திரன்

மொத்த வாக்குகள்: 1,17,364
பதிவானவை: 1,00,306
செல்லாதவை: 4,143
அமைச்சர், பண்ருட்டிராமச சந்திரன்(கழகம்) 51,900
நந்தகோபாலகிருஷ்ணன் (தி.மு.க) 44,263

## பனைமரத்துப் பட்டி - ராசாராம்

மொத்த வாக்குகள் 1,20,913
பதிவானவை 86,470
செல்லாதவை 5,733
சபாநாயகர் ராசாராம் (கழகம்) 48,726
சிவலிங்கம் (தி.மு.க.) 27,810
சுயேச்சைகள் 7 பேர் டெபாசிட் இழந்தனர்.

## ஆயிரம் விளக்கு-கே. ஏ. கே.

மொத்தவாக்குகள் 1,45,099
பதிவானவை 94,257
செல்லாதவை 2,426
அமைச்சர் கே. ஏ. கே. (கழகம்)- 46,246
ஸ்டாலின் (தி.மு.க) 43,954
சுயேச்சை 6 பேர் டெபாசிட் இழந்தனர்.

## தொண்டாமுத்தூர்-அரங்கநாயகம்

மொத்த வாக்குகள்: 1,73,482
பதிவானவை: 1,23,824
செல்லாதவை: 6,080
அமைச்சர் அரங்க நாயகம்(கழகம்) 67,679
வெள்ளியங்கிரி (மார்க்சிஸ்டு) 45,353
சுயேச்சைகள் 10 பேர் டெபாசிட் இழந்தனர்.

## மதுரை கிழக்கு-காளிமுத்து

மொத்த வாக்குகள்: 1,20,711
பதிவானவை: 87,222
செல்லாதவை: 2,637
அமைச்சர் காளிமுத்து (கழகம்) 43,210
குமார் (மார்க்சிஸ்டு) 36,972
சுயேச்சைகள் 14 பேர் டெபாசிட் இழந்தனர்.

## திருச்செங்கோடு-பொன்னையன்

மொத்தவாக்குகள்: 2,06,470
பதிவானவை: 1,46,355
செல்லாதவை: 6,123
அமைச்சர் பொன்னையன் [கழகம்]: 77,659
கந்தசாமி [தி. மு. க.]: 58,437
சுயேச்சைகள் 16 பேர் டெபாசிட் இழந்தனர்.

## அறந்தாங்கி-திருநாவுக்கரசு

மொத்த வாக்குகள்: 1,45,705
பதிவானவை: 1,17,687
செல்லாதவை: 5,892
அமைச்சர் திருநாவுக்கரசு (கழகம்) 70,085
ராமநாதன் (தி.மு.க) 40,164
சுயேச்சைகள் 2பேர் டெபாசிட் இழந்தனர்,

## தூத்துக்குடி-எஸ்.என்.ஆர்.

மொத்த வாக்குகள்- 1,52,824
பதிவானவை: 1,08,473
செல்லாதவை: 3,031
அமைச்சர் எஸ். என். ராஜேந்திரன் (கழகம்) 59,623
அய்யாசாமி (தி.மு.க.) 37, 549
சுயேச்சைகள் 7 பேர் டெபாசிட் இழந்தனர்.

## திருவரங்கம்-சவுந்தரராசன்

மொத்த வாக்குகள்: 1,39,676
பதிவானவை: 1,09,421
செல்லாதவை: 5,276
அமைச்சர் சவுந்தரராசன் (கழகம்) 58,861
ராமசாமி உடையார் (ஜனதா) 38,399
சுயேச்சைகள் 4 பேர் டெபாசிட் இழந்தனர்.


புரட்சித்தலைவர்
ஆண்டிப்பட்டி




## வலங்கைமான்-கோமதி

மொத்த வாக்குகள்: 1,07,360
பதிவானவை: 87,313
செல்லாதவை: 3,736
அமைச்சர் கோமதி சீனிவாசன் (கழகம்) 46,618
சோமசுந்தரம் (தி. மு. க.) 34,347
சுயேச்சைகள் 2 பேர் டெபாசிட் இழந்தனர்.

## வீரபாண்டி-விஜயலட்சுமி

மொத்த வாக்குகள் 1,41,355
பதிவானவை 1,01,985
செல்லாதவை 5, 275
அமைச்சர் விஜயலெட்சுமிபழனி சாமி(கழகம்) 61,609
சுப்பிரமணியம் (தி.மு.க) 33,549
சுயேச்சைகள்5 பேர் டெபாசிட் இழந்தனர்.

## நாமக்கல்-அருணாசலம்

மொத்த வாக்குகள் 1,49,546
பதிவானவை 1,09,850
செல்லாதவை 7,695
அமைச்சர் அருணாசலம் (கழகம்) 58,158
வேலுசாமி (திமுக) 40,868
சுயேச்சைகள் 7 பேர் டெபாசிட் இழந்தனர்,

## ஈரோடு-முத்துசாமி

மொத்த வாக்குகள்: 1,89,520
பதிவானவை: 1,38,433
செல்லாதவை: 4,373
அமைச்சர் முத்துசாமி (கழகம்) 71,722
சுப்புலெட்சுமி ஜெகதீசன் (தி.மு.க.) 60,075
சுயேச்சைகள் 11 பேர் டெபாசிட் இழந்தனர்.

## பேராவூரணி-கோவேந்தன்

மொத்த வாக்குகள் 1,21.151
பதிவானவை 1,01,798
செல்லாதவை 6,800
அமைச்சர் கோவேந்தன் (கழகம்) 52,690
ஏ. எம். கோபு (கம்யூ) 25,423
சுயேச்சைகள் 5 பேர் டெபாசிட் இழந்தனர்.

## ஒரத்தநாடு வீராசாமி

மொத்த வாக்குகள்: 1,27,906
பதிவானவை: 1,05,663
செல்லாதவை: 4,708
அமைச்சர் வீராசாமி (கழகம்) 46,717
எல். கணேசன் (தி. மு. க.) 42,648

## சாத்தூர்-ராமச்சந்திரன்

மொத்தவாக்குகள்: 1,52,911
பதிவானவை: 1,18,291
செல்லாதவை: 3,174
அமைச்சர் கே.கே.எஸ் எஸ்.ஆர்.ராமச்சந்திரன் (கழகம்) 58,745
கருப்புசாமி (தி.மு.க) 51,338
சுயேச்சைகள் 4 பேர் டெபாசிட் இழந்தனர்.

## திருவையாறு-துரை-கோவிந்தராசன்

மொத்த வாக்குகள்: 1,15,730
பதிவானவை: 90,694
செல்லாதவை: 6,432
துரைகோவிந்தராசன் (கழகம்) 46,074
ராமமூர்த்தி (சுயே) 33,885
சுயேச்சைகள் 7 பேர் டெபாசிட் இழந்தனர்.

## குளித்தலை முசிறிபுத்தன்

மொத்தவாக்குகள் 1,30,379
பதிவானவை 1,03,377
செல்லாதவை 6, 326
முசிறிப்புத்தன் [கழகம்]: 62,165
கருப்பையா [கம்யூ]: 32,317
சுயேச்சைகள் 3 பேர் டெபாசிட் இழந்தனர்.

## மயிலாப்பூர் வளர்மதி

மொத்த வாக்குகள் 1,56,793
பதிவானவை 1,03,417
செல்லாதவை 3,043
வளர்மதி (கழகம்) 51,870
பாரதி (தி.மு.க.) 46,396
சுயேச்சைகள் 7 பேர் டெபாசிட் இழந்தனர்.

---

**ஆண்டிப்பட்டி**
**முதல்**
**ஆயிரம்விளக்கு**
**வரை**
**அற்புதம்**
**படைத்த**
**அருமைத்**
**தமிழ் மக்கள்**
**வாழ்க !**
**வாழ்க!!**
**நன்று !!!**

---


வீராசாமி
ஒரத்தநாடு


கே. கே. எஸ். எஸ்.
ஆர். ராமச்சந்திரன்
சாத்தூர்


கோமதிசீனிவாசன்
வலங்கைமான்


விஜயலட்சுமி-
பழனிசாமி
வீரபாண்டி


வளர்மதி
மயிலை


ராசாராம்
பனைமரத்துப்பட்டி


ப. உ. ச.
மேல்மலையனூர்


மாதவன்
திருப்பத்தூர்


துரை.
கோவிந்தராசன்
திருவையாறு